21st August 1961]

SRI A. A. RASHEED : Have the Government received any protest or petition from the Mission authorities against Government acquiring this building?

THE HON. SRI M. A. MANICKAVELU : Not that I am aware of.

*Bridge across Cauvery*

* 1285 *Q.*—SRI R. SRINIVASA IYER (on behalf of SRI S. LAZAR) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the cost of the new bridge across Cauvery in Tiruchirappalli;

(*b*) the date when it was commenced;

(*c*) the date when it was scheduled to be completed; and

(*d*) the date when it will be actually completed?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Rs. 38·545 lakhs as technically sanctioned by Chief Engineer.

(*b*) 20th March 1957;

(*c*) 31st December 1960;

(*d*) The Government of India's approval for superstructure design is awaited. On receipt of Government of India's approval, a revised target date for completion will be fixed.

SRI R. SRINIVASA IYER : ஸார், இந்தப் பாலம் கட்டுவது இப்போது என்ன நிலைமையில் இருக்கிறது. 1960-ல் முடிந்துவிடும் என்று முதலில் சொல்லப்பட்டதே. மற்றும் சமீபத்தில் ஏற்பட்ட வெள்ளத்தினால் கட்டிய பாலத்திற்கு ஏதாவது இடையூறு ஏற்பட்டதா ?

THE HON. SRI P. KAKKAN : சமீபத்தில் ஏற்பட்ட வெள்ளத்தினால் இந்தப் பாலத்திற்கு எந்தவிதமான சேதமும் இல்லை என்று அறிகிறேன். இதற்கு சூபர்ஸ்ட்ரக்சர் டிஸைன் அப்ரூவ் ஆகவேண்டும். இதற்காக டெபுடி சீஃப் என்ஜினீயரை டில்லிக்கு அனுப்பினோம். அவரும் போய்ப் பேசி வந்திருக்கிறார். மத்திய சர்க்காரிடமிருந்து உத்திரவு வந்தவுடன் எடுத்துக் கொள்ளப்படும்.

*Mullikadu Vaniyar Scheme*

* 1286 *Q.*—SRI M. K. MARIAPPAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

முள்ளிக்காடு-வாணியாறு அணைக்கட்டுத் திட்டம் பற்றி சர்க்கார் எடுத்திருக்கும் முடிவு என்ன ?

THE HON. SRI P. KAKKAN : The Vaniar Scheme has been deferred.

*Homœopathic System of Medicine*

* 1287 *Q.*—SRI M. KALYANASUNDARAM (on behalf of SRI A. R. MARIMUTHU) : ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஹோமியோபதி வைத்திய முறையை அங்கீகரிப்பது சம்பந்தமாக ஆராய்ச்சி கமிட்டி நியமிக்கப்பட்டதா ?

(இ) அதனுடைய அறிக்கை கிடைத்துவிட்டதா ?

(உ) அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது ?

[21st August 1961

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) & (இ) Yes, Sir.

(உ) The Committee has submitted its report in a bill form. Legislation has to be undertaken and the question is under consideration.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware of the fact only mostly uneducated people are practicing this homœopathic system of medicine?

THE HON. SRI M. A. MANICKAVELU : Uneducated means uneducated in proper modern medicine. That is what the hon. Member means. In order to avoid second-rate and third-rate medical practitioners, it is proposed to legislate so that proper standards might be kept up whatever be the system of medicine, homœopathy or indigenous system of medicine. We want to maintain standards. That is why in this regard we want to have legislation.

SRI K. VINAYAKAM : What is the attitude of this Government towards this homœopathic system of medicine? Does this Government recognize it as modern system of medicine efficacious to relieve patients from diseases?

THE HON. SRI M. A. MANICKAVELU : Recently Government have recognized this system. Whether it was recognized as a system of modern medicine, is not the question. As a system of medicine it has been recognised and the Government want to maintain standards. On account of that, legislation is necessary.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்தப் பிரச்னையைக் குறித்து இரண்டு ஆண்டுகளாக இரண்டு, மூன்று கேள்விகளுக்கு பதில் சொல்லியிருக்கிறார்கள். இதற்குச் சட்டம் கொண்டுவருவதாக கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லியிருக்கிறார். இப்போது அது அஷ்யூரன்ஸ் கமிட்டியிலும் இருக்கிறது. இரண்டு ஆண்டுகள் தாமதமாவதற்கு முக்கிய காரணம் என்ன ? அதிலே உள்ள குறைபாடுகள் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதற்காக மூன்று டாக்டர்களைச் சேர்த்து ஒரு கமிட்டியை ஏற்படுத்தினோம். அவர்கள் ரிப்போர்ட் செய்திருக்கிறார்கள். அவர்களுடைய ரிப்போர்ட் பிரகாரம் இரண்டு கோர்ஸுகள், ஒன்று $6\frac{1}{2}$ வருஷம், மற்றொன்று $3\frac{1}{2}$ வருஷம் ஏற்படுத்த வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். அது இப்போது பில் ஃபார்மில் இருக்கிறது. சட்டம் வந்து அது முடிவானதும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

SRI M. KALYANASUNDARAM : வைத்திய விஞ்ஞானத்தில் முன்னேறியிருக்கும் நாடுகளான ஜெர்மனி, சோவியத் யூனியன் ஆகிய நாடுகளில் ஹோமியோபதி ஒரு அங்கீகரிக்கப்பட்ட வைத்திய முறை என்று அமைச்சர் அறிவார்களா ? ஆகவே இந்த ஹோமியோபதியை சொல்லிக் கொடுக்கும் முறையை சர்க்காரிலே ஏற்றுக்கொண்டு நடத்துவார்களா ? இப்போது அது தனியார் கையில் இருக்கிறது. பணம் சம்பாதிப்பதற்காக மட்டும் அதை உபயோகப்படுத்துகிறார்கள். இதற்காகத் தனியாக பள்ளிகளை ஏற்படுத்தி அல்லது இப்போது இருக்கும் வைத்தியக் கல்லூரிகளிலேயே சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON SRI M. A. MANICKAVELU : இந்த முறைப் பிரகாரம் கூட வைத்திய சிகிச்சை செய்யலாம் என்று அரசாங்கம் அங்கீகரித்திருக்கிறது. அங்கீகரித்த பிறகு, மற்ற முறைகளில் எப்படி பள்ளிச்

21st August 1961]

ளெல்லாம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதோ அதே போன்று இந்த முறையிலும் ஏற்பாடு செய்ய சட்டம் கொண்டுவர வேண்டும். அப்படி சட்டம் கொண்டு வந்த பிறகு அரசாங்கமே நடத்துவதா அல்லது தனியார் துறையில் சர்க்கார் உதவியோடு நடத்தலாமா என்பதைப்பற்றி யோசிக்க லாம்.

SRI A. A. RASHEED : What are the salient features of the newly proposed Bill?

THE HON. SRI M. A. MANICKAVELU : The salient features are that they must have a hard and good course of 6½ years. That is the degree course. The diploma course would last for three years. Under these two categories properly trained men in homœopathy would be got.

SRI N. K. PALANISAMY : ஸார், 1½ வருஷத்திற்கு முன்னதாக கேள்வியைப் போட்டபோது, இப்போது, சொன்னதைப்போல் அப்போதும் கன்சிடரேஷனில் இருப்பதாகச் சொன்னார்கள். அதை உடனடியாக சட்டமாகக் கொண்டுவருவதற்கு சர்க்கார் என்ன ஏற்பாடுகளைச் செய்தார்கள்? அதற்கான என்ன நடவடிக்கைகள் அதுவரை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதை நல்லமுறையிலே மசோதாவாகக் கொண்டு வருவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகிறது.

SRI M. KALYANASUNDARAM : ஸார், இதற்கு பட்டப்படிப்புக்கு 6½ வருஷம் என்று போடப்பட்டிருப்பதற்குக் காரணம் என்ன ? ஹோமியோபதி முறையே தானாக அழிந்து விடட்டும் என்பது சர்க்காரின் நோக்கமா ? என்று அறிய விரும்புகிறேன். அதோடு எம்.பீ.பீ.எஸ். பட்டப் படிப்புக்கே 5 வருஷம்தான் போடப்பட்டிருக்கிறது. இதற்குமட்டும் 6½ வருஷம் என்று போடுவதற்கான காரணம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதிலே கமிட்டி சேர்மனாக போடப்பட்டுள்ள டாக்டர் உமாபதி முதலியார் கொடுத்துள்ள ரிப்போர்டிலே 6½ வருஷம் என்று போடப்பட்டிருக்கிறது. ஐந்து வருஷம் படிப்புக்காக இருக்கும். பாக்கி 1 வருஷம் அல்லது 1½ வருஷம் பிராக்டிகல் போன்றவைகளுக்காக இருக்கும்.

SRI N. K. PALANISAMI : இதற்கான பள்ளிக்கூட வசதிக்கான பணம் தனிப்பட்டவர்கள் துறையில் இருந்து சர்க்காருக்குக் கொடுப் பதாக வாக்களிக்கப்பட்டிருக்கிறதா ? அப்படியானால் அதன் விவரமென்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படி ஒன்றும் வாக்களிக்கப்பட்டு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்த கமிட்டியினுடைய ரிப்போர்டு சர்க்காருக்கு எப்போது கிடைத்தது ? இப்போது மசோதா தயாராக இருக்கிறதா ? அப்படி மசோதா தயாராயிருந்தால் எப்போது கொண்டு வரப்படும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தக் கமிட்டி ரிப்போர்டு சமர்ப்பித்தது 1959 டிசம்பரிலே. அதற்குப் பின்னால் பரிசீலனை நடந்து கொண்டு வருகிறது. அது முடிந்தவுடன் கொண்டுவரப்படும்.

SRI N. K. PALANISAMI : இந்தக் கமிட்டியினுடைய ரிப்போர்டை நமக்கு மேஜைமேல் வைக்க முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதைப்பற்றி யோசிக்கப்படும்.